உ

சிவமயம்.

அத்வைதார்த்த

# அறிவுரைத்திரட்டு

—(×)—

இஃது

கோவிலூர்

மகா. கோவிந்தசுவாமிகள்

திரட்டியது.

---


தஞ்சாவூர்

ஸ்ரீ சங்கரவிலாஸ சாரதாமந்திர பிரஸில்

பதிப்பிக்கப்பெற்றது.

1949






உ

சிவமயம்

அத்வைதார்த்த

# அறிவுரைத் திரட்டு.

———○———

## கணபதி வணக்கம்

சீரார் கணபதியைச் சேவித் தறிவுரைகள்
நேராய்த் திரட்டிடுவோம் நேர்ந்து.

## குரு வணக்கம்.

பூதல மதனின் மாதவத் தடியார்
பொருந்துவெம் பவத்துய ரகன்று
பேதமின் ஞானப் பிரமவா னந்தப்
பேறுறக் கருணையான் மிகுந்த
ஆதர வோடு மருமறை யந்த
மானமா வாக்கிய முரைத்த
நாதனுங் குரவ னருண்மகா தேவ
ஞானதே சிகன்றனைப் பணிவாம்.

## நூல்

### திருமூலர் திருமந்திரம்

#### ஆறந்தம்

வேதமோ டாகம மெய்யா மிறைவனூ
லோதுஞ் சிறப்பும் பொதுவுமென் றுள்ளன
நாத னுரையவை நாடி லிரண்டந்தம்
பேதம தென்பர் பெரியோர்க் கபேதமே. 1

மன்னிய சோகமா மாமறை யாளர் தஞ்
சென்னிய தான சிவோகமா மீதென்ன
வன்னது சித்தாந்த மாமறை யாய்பொரு
டுன்னிய வாகம நூலெனத் தோன்றுமே 2

#### மார்க்க சைவம்

ஆகம மொன்பா னதிலான நாலேழு
மோகமி னூலேழு முப்பேத முற்றுடன்
வேகமில் வேதாந்த சித்தாந்த மெய்ம்மையொன்
றாக முடிந்த வருஞ்சுத்த சைவமே. 3

#### உட்சமயம்.

ஒன்றதே பேரூர் வழியதற் காறுள
வென்றதே போலு மிருமுச் சமயங்கள்
நன்றிது தீதிது வென்றுரை மாந்தர்கள்
குன்று குரைத்தெழு நாயையொத் தாரே.

### சரியை

உயிர்க்குயி ராய்நிற்ற லொண்ஞான பூசை
யுயிர்க்கொளி நோக்கின் மகாயோக பூசை
யுயிர்ப்பெறு மாவா கனம்புறப் பூசை
செயிற்கடை நேசஞ் சிவபூசை யாமே. 5

சார்ந்தமெய்ஞ் ஞானத்தோர் தானவ ஞயினேர்
சேர்ந்தவெண் யோகத்தார் சித்தர் சாமதியோர்
ஆய்ந்த கிரியையோ ரர்ச்சனை தப்பாதோர்
நேர்ந்த சரியையோர் நீணிலத் தோரே. 6

### கிரியை

பத்தன் கிரியை சரியை பயில்வுற்றுச்
சுதத வருளாற் றுரிசற்ற யோகத்தி
லுய்த்த நெறியுற் றுணர்கின்ற ஞானத்தாற்
சித்தங் குருவரு ளாற்சிவ மாகுமே. 7

### யோகம்

நெறிவழி யேசென்று நேர்மையு ளொன்றித்
தறியிருந் தாற்போலத் தம்மை யிருத்திச்
சொறியினுந் தாக்கினுந் துண்ணென் றுணராக்
குறியறி வாளர்க்குக் கூடலு மாமே. 8

### ஞானம்

ஞானத்தின் மிக்க வறநெறி நாட்டில்லை
ஞானத்தின் மிக்க சமயமு நன்றன்று

ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவா
ஞானத்தின் மிக்கார் நரரின் மிக்காரே 9
இருக்குஞ் செம்மி யிடம்பிரம மாகும்
வருக்கஞ் சராசர மாகு முலகந
தருக்கிய வாசார மெல்லாந் தருமே
திருக்கிலாஞானத்தைத் தேர்ந்துணர்ந் தோர்க்கே 10

டோதன்

சிவ னென்னச் சிவ னென்ன வேறிலை
சிவ னார்சிவ னாரை யறிகிலர்
சிவ னார்சிவ னாரை யறிந்தபின்
சிவ னார்சிவ னாயிட் டிருப்பரே. 11

மத்திய சாக்கிராவத்தை

ஆகின்ற தொண்ணூற்றோ டாறும் பொதுவென்ப
ராகின்ற வாறு றருசைவர் தத்துவ
மாகின்ற நாலேழ்வே தாந்தி வயிணவர்க்
காகின்ற நாலாறை யைந்துமாயா வாதிக்கே. 12

கேவல சகலசுத்தம்

தனே தனக்குப் பகைவனு நட்டானுந்
தானே தனக்கு மறுமையுமிம்மையுந்

தானே தான் செய்த வினைப்பயன் றுய்ப்பானுந்
தானே தனக்குத் தலைவனு மாமே. 13

### பராவத்தை.

பொன்னை மறைத்தது பொன்னணி பூடணம்
பொன்னின் மறைந்தது பொன்னணி பூடணந்
தன்னை மறைத்தது தன்கர ணங்களாந்
தன்னின் மறைந்தது தன் கரணங்களே. 14

மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தின் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
பரத்தின் மறைந்தது பார்முதற் பூதமே. 15

### நின்மலாவத்தை

முன்னை யறிவினிற் செய்த முதுதவம்
பின்னை யறிவினைப் பெற்றா லறியலாந்
தன்னை யறிவ தறிவா மஃதன்றிப்
பின்னை யறிவது பேயறி வாகுமே. 16

தன்னை யறிந்து சிவனுடன் றானாக
மன்னு மலங்குண மாளும் பிறப்பறும்
பின்னது சன்முத்தி சன்மார்க்கப் பேரொளி
நன்னது ஞானத்து முத்திரை நண்ணுமே. 17

## அறிவதயம்

முன்னை முதல்விளை யாட்டத்து முன்வந்தோர்
பின்னைப் பெருமலம் வந்தவர் பேர்த்திட்டுத்
தன்னைத் தெரிந்துதன் பண்டைத் தலைவன்றாள்
மன்னிச் சிவமாக வாரா பிறப்பே. 18

## மகாவாக்கியம்

ஆறு றகன்ற வணுத்தொம்ப தஞ்சுத்த
மீறான தற்பத மெய்துப சாந்தத்துப்
பேறா கியசிவ னீங்கிப்பிர சாதத்து
வீறான தொந்தத் தசிதத்வ மசியே. 19

ஆகிய வச்சோயந் தேவதத் தன்னிடத்
தாகிய விட்டு விடாத விலக்கணைத்
தாகுப சாந்தமே தொந்தத் தசியென்ப
வாகிய சீவன் பரன்சிவ னாமே. 20

நீயது வானா யெனநின்ற பேருரை
யாயது நானானே னென்னச் சமைந்தறச்
சேய சிவமாக்குஞ் சீர்நந்தி பேரரு
ளாயது வாயனந் தானந்தி யாமே. 21

அறிவறி யாமை யிரண்டு மகற்றிச்
செறிவறி வாயெங்கு நின்ற சிவனைப்
பிறிவறி யாது பிரானென்று பேணுங்
குறியறி யாதவர் கொள்ளறி யாரே. 22

சத்திய ஞானானந்தம்.

பாலொடு தேனும் பழத்து விரதமும்
வாலிய பேரமு தாகு மதுரமும்
போலுந் துரியம் பொடிபட வுட்புகச்
சில மயிர்க்கா றெறுந்தேக் கிடுமே. 23

மோன சமாதி

தானு மழிந்து தனமு மழிந்துநீ
டூனு மழிந்து வுயிரு மழிந்துடன்
வானு மழிந்து மனமு மழிந்தபி
ஞனு மழிந்தமை நானறி யேனே. 24

அணைந்தோர் தன்மை

சித்தஞ் சிவமாய் மலமூன்றுஞ் செற்றவர்
சுத்தஞ் சிவமாவர் தோயார் மலபந்தங்
கத்துஞ் சிலுகுங் கலகமுங் கைகாணார்
சத்தம் பரவிந்து தாமாமென் றெண்ணியே. 25

---

ஸ்ரீ ஜகத்குரு விவேக சூடாமணி.

நித்தமாம் பரசி வைக்கிய நிகழ்த்திய ஞானந் தானே
சத்திய ஞான மென்று சம்மதஞ் சுருதிச் சொல்லாஞ்
சுத்தமா மான்மானுன்மசொரூபகல் விவேகத்தாலே
யத்திறஞான முண்டாமாதலால் விவேகஞ்செய்க. 1

சிரிவகங் கார மாதி விகாரமற் றதன பாவ
மிருமையா மிவற்றை யெல்லா மிங்கியா துணரு
[மியாதை
யொருபொரு ளுணரா தந்த வுணர்வுரு வான
[சாட்சிப்
பொருளினை மிகவு நுண்மைப் புந்தியா னுணர்தி
[மைந்தா 2

சூனியத்தப் பாலாகச் சொல்லிய வான் மாவிற்கு
மேனிலை யாக வொன்று மேவியதில்லை யென்று
மானதாலறி பொருட்கு மறிபடாப் பொருளினுக்கு
மேனிலைய றிவே மெய்யாய் மேவி யவான் மாநீயே 3

விட்டலக் கணையும் வேண்டாம் விடாதலக் கணையும்
[வேண்டா
மிட்டனே யுபய மான விலக்கணை வேண்டு மீது
திட்டமாஞ் சோயங்தேவ தத்தனென் கின்ற வாக்கிற்
றட்டிடாவதுபோலிதாங் தத்துவமசியாம் வாக்கில் 4

திருத்தமாஞ் சோயங் தேவதத்தனென்கின்ற வாக்கு
விருத்தமாங் தரும மெல்லாம் விட்டவ னைக்கியத்தை
தரித்திடச் சொல்வ தேபோற் றத்துவ மசியாம்
[வாக்கும்
விருத்தமாங் தரும மெல்லாம் விடுத்தயிக் கியமே
[சொல்லும். 5

இத்திறம் விரோதந் தள்ளி யிலக்கியச் சித்தே யான
சுத்தமாம் பரசி வர்க்குச் சொல்லிய வைக்கி யத்தை
நித்தமு மறிஞ ரெல்லா நிலைமையாய்ப் பரிச யிப்பர்
புத்திர நீயு மங்ஙன் புகன்றதைப் பரிச யிப்பாய் 6
இத்திறம் வேதந் தோறு மிசைமகா வாக்க னேக
மத்திர தாலமாதி யசத்தினை யபவா தித்துச்
சுத்தமாய் வானம் போலச் சூக்கமாய்த் தானே நின்ற
வத்தமி லிந்தச் சீவர்க் ககண்டவைக் கியமே
சொல்லும். 7
ஆதலாற் பொய்யே யாகி யகமென வறியப்பட்டிங்
கேதெது தோன்று நிற்கு மிவையெலா நன்றாய்
(விட்டுப்
போதவா னந்த வுண்மைப் பூரணப் பிரம நானென்
றேதமில் புந்தி யாலே யின்றுனை யுணர்தி
மைந்தா 8.
யாதினாற் பிரம மன்றி யாதுமே வேறிங் கில்லை
யாதலா லதுவே யுண்மை யாதுதா னெவர்க்கு
(மான்மா
யாதுவத் துவிதஞ் சாந்த மமலமாம்பரமாமென்றுஞ்
சாதுவே யதுநீ யாவாய் சத்திய மையமில்லை 9.
கனவினி லாரோ பித்த காலதேசம் புலன்க
ணினைவுறு ஞாதுராதி நிகிலமும் பொய்யே போல

கனவிலு மஞ்ஞானத்தா னம்மிடையா ரோபித்த
கனவுடன் முதலேயாகக் கண்டவிச் சகமும்
(பொய்யே 10

ஏதமில் கனகமே போலியா நொருபிரமம் மாலாற்
கோதுறு நாமரூபங் குணமுதல் விகாரமான
பேதமாய்த் தோன்றினும் பேதியா விகாரியாகா
சாதுவே யதுநீயாவாய் சந்ததஞ்சிந்தைசெய்வாய் 11

தொந்தமாம் பவத்தைச் செய்புந்துட் டமாம் பிரதி
(பந்த
மைந்தனே யனேகமேனு மருவியவ வற்றிற்கெல்லா
முந்திய விகாரமாக முளைத்தி டுமகங்காரந்தான்
சந்ததமூலமத்தைச்சருவதாவொழிக்கவேண்டும் 12

சொரூப நற்சத்தையாலே சுயமுமே சத்துப்
(போலாய்
வெருளுறுங் கர்த்தாவாகி விகாரியாய்ச் சொரூபங்
(தன்னின்
பிரதி பிம்பத்தை மேவிப் பிறங்கிய வகங்காரத்தின்
மருவியவான்மபுந்திமாற்றுவாய்விரைவில்மைந்தா 13

சொரூபநிட் டையையோர் காலுஞ் சொற்பமுந்
தவிர வொண்ணு
தாணிபிலந்த நிட்டை தவிர்தலே கால னென்று

பிரியனே பகவானான பிரமபுத் திரரே யாதி
பாசனச் சுசாதீ யத்திற் பலவிதம் பகர்ந்தா
ரன்றே 14

ஆதலாற் சொரூப நிட்டை யன்றியுந் தவிர்தல் (ஞானிக்
கேதுமா மனர்த்த மாகு மேதெனிற் றவிர்த லாலே
சாதமா மோக மத்தாற் சனித்திடு மகந்தை யத்தாற்
கோததாம் பந்த முண்டாங் கூடிடு மவற்றாற்
றுன்பம் 15

திருசிய மியாவு நீக்கித் திடமுற வகண்ட பாவஞ்
சருவதா வடைவ தற்கே சாதுவா மெதிக ளுக்குஞ்
சிரவண மாதி சன்மஞ் செய்தபின் சுருதி தானே
சருவதா நிருவிகற்ப சமாதியை விதிக்குமன்றே 16

---

## பிரமக்ஞை

தற்பதப் பொருளாயுள்ள வறிவொடே கூடுதற்கு
நிற்பதொன் றிலையாய்ச்சொல்லப்பட்டகாயாதிவிட்டு
மெய்ப்படத் துரியத்தோடே யுடனாகி வேறிலாத
சிற்பொருடனையேதத்தொமசியெனச்செப்புமன்றே
வேதநான் மிருதிபுரா ணமத்துவித மெய்ம்மையே
(விளம்ப மெய்த்தர்க்கஞ்

சாதியாகிற் கத்தத்துவ ஞானத் தவருமிப்பொருளை
(யே சார
வாதியாஞ் சிவனூராயணனுனிங் கறைந்தது மபேத
(மாயிருக்க
வாதியா மொருவர்க் கிதைய னுதரித்தன் மாயை
யினுடைய வல்லபமே 2.

யசுர்வேத சகரகசியோபநிடதம்

பிரஞ்ஞானம் பிரஹ்மம்

எதுதனு லுருவங்காண்பா னெதுதனுற் கேட்பான்
(சத்தம்
முகருவ னெதனுற் கந்த மொழிகுவ னெதனுற்
(சொல்லை
மிகுருசி யருசியென்று விசேடமாயுணர்வனெத்தால்
அதுபிரஞ்ஞான மென்னவறைந் திடப்படுமாலிங்கே
சதுமுகன் மகவானுதி சாற்றுமத் தேவருள்ளும்
கதிபெறு மனிதன் மாவா கானடையாதி யுள்ளும்
பொதியொரு சேதனந்தான் புகன்றிடு பிரமமாகும்
அதுகொடப் பிரமமென்பா லறிபிரஞ்ஞானமாமே 2

அகம்பிரமாஸ்மி.

பூரணபரம வான்மா பொருந்துஞானுதி கார
காரண மாவ தாகக் கழறுமித் தேகத்துள்ளே




பூரணசாட்சியாகப்புகுந்துநின்றிலகுமந்தக்
காரணமதனுலித்தைக்கனவகமென்பர்தானுய். 3

பூரணபரமான்மாவைப்புகழ்பெறுபிரமமென்றிங்
காரணமொழிதானன்சேயறைந்திடுமஸ்மியென்றல்
ஒரெணின்றன்மையானவொருமையையுணர்த்து
[மததால்
பூரணப்பிரமநானுப்பொருந்தியேநிற்பேனென்றும்.4

## தத்துவமஸி

ஏகமேவாத்விதீயமென்றிடும்பிரமசத்தே
போருமோர்நாமரூபம்பொருந்திடாதிருந்ததிந்தத்
தேகமேமுதலாமெல்லாச்சிருட்டியின்முன்னே
[யின்றும்
ஏகமாமிதனத்தன்மையியம்பிடப்படுந்தத்தென்றே5

உரையுபதேசங்கேட்பானுடலொடிந்தியமேயாதி
உரைபொருளவற்றின்மேலாமொருபொருடானே
[யிங்குச்
சுருதியிற்றுவம்பதத்தாற்சொலப்படுமசியேகத்வம்
தெரிதரநின்றதத்தைத்தேர்ந்துநீயநுபவிப்பாய். 6

## அயமாத்மாபிரஹ்மம்.

சொப்பிரகாசமாகத்துலங்கிடுமபரோட்சத்வம்
ஒப்புவரயமென்றிங்கேயுரைத்திடுமொழியினுனே

தப்பகங்காரமாதிசரீரவந்தத்தினுள்ளாம்
இப்பிரத்தியக்கேவான்மாவென்றுரைத்திடுவதாகும்
இதுவெனச்சுட்டிக்காமிவ்வுவெலாவுலகந்தன்னின்
முதுபொருட்டத்துவத்தைமொழிந்ததுபிரமச்
[சொல்லால்
அதுகொடுதெரிந்துகொண்மினந்தவோர் பிரமந்
[தானே
அதிசுவப்பிரகாசான்மவறிவுருவாகுமென்றே. 8

அவ்வநான்மதிருட்டியாலேயவிவேகவுறக்கமுற்றேன்
இவ்வெனதுநானென்னும்பொய்யிலகுகனுக்கதியு
[முற்றேன்
அவ்வொருமாவாக்யமென்னுமாசிரியனருள்வாக்
[கானே
செவ்விதொளிர்சொருபபானுசிறந்துதிக்கவிழித்
[தேன்யானே. 9

வாச்சியந்தனக்கிரண்டுவகைப்பொருளொழுங்க
[தாகும்
வாச்சியமிலக்ஷயமென்றேவகுத்திடுதுவம்பதத்தில்
வாச்சியம் பூதகார்யமற்றுமிந்தியாதியாகும்
பூச்சியவிலக்கியந்தான்பொருந்துமத்துவம்ப
[தார்த்தம். 10

ஈசனதியல்பானுயவெழின்மதிவாச்யமாகும்

பேசுசச்சிதாநந்தநற்பிரமமேவிலக்கியமாம்
ஆசிறற்பதத்தினர்த்த மறைந்திடப்பட்டவிதாம்
பேசுமவ்விரண்டனைக்யம்பிந்தியவசிபதத்தாம். 11

காரியவுபாதியோடுகாரணவுபாதியுண்டேல்
சீரியதுவந்தத்தென்றுசெப்பிருவகையாமின்றேல்
ஓரியற் சச்சித்தின்பவுருவெனுமொன்றேயாகும்
ஓரிருவசனவேதங்குரைத்திடுதேசங் காலம். 12

ஆயவத்தேசங்காலமனைத்தையும்விட்டுமேலே
ஏயவப்பொருளைநோக்கினேகமாமிரண்டாகாது
காயமதொன்றேயென்னுங்கருத்தினுலுலகர்தம்முன்
ஆயவித்தேவதத்தனவனெனமொழிதல்போல. 13

காரியவுபாதியுள்ளோன்கட்டுறுமிந்தச்சீவன்
காரணவுபாதியுள்ளோன்கட்டுருவந்தவீசன்
காரியத்தன்மையோடுகாரணத்தன்மைவிட்டால்
பூரணபோதமிங்குப்பொங்கியேயெஞ்சிநிற்கும். 14

---

## சிவஞானவள்ளலார் சாத்திரம்
## பதிபசுபாசவிளக்கம்
## மகாவாக்கியவிலக்கணம்

ஆதிதிருநான்மறைமுடியிலறையுந்தத்துவமசியென்
[றே
யோதிலதுநீயானுயென்றுரைக்குமும்மைப்பதமாகப்

போதமுடையோயிதன்பொருளையெவ்வாறெடுத்
[துப்போதிப்பேன்
பேதமகன்றவுள்ளத்தாற்காணும்பெரியவாக்கியமே.

...ன்னனுன்புளிஞனென்றேகவலையுற்றழுங்குங்காலைக்
கல்னநீகிராதனன்றுகௌந்திபுத்திரனென்றுற்போ
லன்னியவுடனுனென்றேயயர்ந்துளமழியேன்மைந்த
வன்னியமென்றுகண்டவறிவுநீயுணர்ந்துகொள்ளே.

கல்லெலாமெறிந்துமீதிக்கையினையெறிவாருண்டோ
சொல்லியகருவியெல்லாந்தொலைத்தவன்மீதியன்றே
வல்லறிரவனேசோதியாகியபிரமமாவா
னெல்லையின்மறைகளெல்லாமிவ்வணமுரைக்கு
[மன்றே. 3

ஒருவனொருதேயத்திற்பிரமசரியாயுற்றான்
மருவிமற்றோர்நாட்டகத்தின்மகிழ்கிரகியாயினன்
பரவிபின்னோர்மண்டலத்திற்பகர்துறவியாய்நடித்
[தான்
விரவியகோலம்போக்கின்வேறில்லையவனிவனே. 4

ஓடுமாநதிகடந்தோரொன்பதுபேரையெண்ணித்
தேடும்பத்தானைக்காணன்றிகைத்துநின்றலராநிற்ப
நீடியவொருவனலேனீபத்தானென்னவோடும்
வீடியதுயரமெல்லாம்வியப்பினையடைந்தானன்றே.5

அன்னியகருவியெல்லாநாமலவென்றறிந்தோன்
பின்னரக்கருவியெல்லாம்பிரித்தவன்றனைமறப்ப
மன்னியசேடநீயேயென்றுமாதவத்தின்வந்த
சென்னிலைக்குரவன்சொல்லாற்றெளிவதுஞான
[மாமே. 6

மச்சுக்கூப்பிட்டுதென்றேமதிப்பவருண்டோவந்த
மச்சுளேயொருவனன்றிமச்சுக்கூப்பிடுமோபேதாய்
நச்சியதேகசேட்டையாவையுநாடிப்பார்க்கி
லச்சுளேநின்றவான்மாவலெனவாய்ந்துகொள்ளே. 7

சித்தாந்த தரிசனம்

அத்துவித மொன்றேயா மாங்கிரண் டின்மையெனி
லத்துவித மன்றோ வது. 8
துவிதமிரண் டாகுமத் துவிதமொன் றாகுந்
துவிதமயல் கெட்டோய் துணி. 9
அத்து விதத்துக் கருத்தம் பலவென்னுஞ்
சிற்றறிவு கொண்டுசில கீழ். 10

உபதேச மாலை

சிவ பரமிரண்டுந் தேருமிடத் தேகமென்று
மேவியசின் முத்திரைகொள் மென்கரத்தா-லோவில்
வழக்கறுத்தான் பல்சமய வாதிகளே காண்மின்
மழுக்கரத்தி லேந்தியவெம் மான். 11

## சிவஞானப்பிரகாச வெண்பா.

அத்துவிதமுத்தியளித்தகுருநாதாவென்
பொய்த்துவிதம்போமாறுபோதித்த-கத்தனே!
மூத்தியிலுமும்முதலுமுண்டென்றுரைப்பதுவுஞ்
சத்தியமோமித்தையோசாற்று. 12

கையிலுறுபுண்ணுக்குக்கண்ணாடிவேண்டுவமோ
மெய்யுணர்விலுண்டோவிபரீத-மையறிவு
மோரறிவாய்ப்போனவிடத்தோ கோகோமும்
[முதலுஞ்
சோராமனிற்குமோசொல். 13

சைவஞ்சிவத்தோடு சம்பந்தமானமையாற்
சைவமேயத்துவிதஞ்சாதிக்குஞ்-சைவத்தை
வேறென்றுகொள்ளற்கவேறற்றவேதாந்தக்
கூறென்றுகொள்ளுதலேகொள். 14

ஞானவிளக்கம்

பக்குவத்துக் கிடாயப் பன்னெறி களுஞ்சொல்லு
மிக்கவதி பக்குவர்க்கு வேதந்-துக்கமிலா
ஞானத்தைச் சொல்லுமதை நன்ருய் விசாரித்துன்
ஊனத்தைப் போக்கிடநீயுன். 15

அறிவேசிவமென்றறைந்ததிருமூலர்
பிறிவின்மொழியொன்றைப்பிடித்தார்-பிறியாச்
சநநமரணமிலெசங்கேதமில்லை
மனனமிலையென்றேமதி. 16

## சுருதிசார விளக்கம்

வான்முதலுலகமெல்லாமனத்திடையாக்கவல்ல
நான்முகப்பிரமன்றன்னைநவில்சுகமுனிவனேக்கி
மோனவத்துவிதச்சொற்குமொழிபொருளிரண்டோ
[வொன்றோ
ஞானசற்குரவசொல்வாயென்றுளநைந்து
[கேட்டான். 17

ஏகமேவாத்துவிதம்பிரமோகமென்றிசைப்பத்
தாகமொடுஞ்சுகமுனிவன்சந்தேகத்தடைநீங்கி
யாகமெனுஞ்சிறையுலவாதாநந்தச்சிறையாகி
யேகமேயத்துவிதம்பிரமநாமெனத்தெளிந்தான். 18

அத்துவிதந்துவிதமல்லாதெனவரியமறையேக
மத்துவிதமிதற்கையமில்லையென்றேய்ந்தாலும்
பொய்த்துவிதமயக்கொழியார்பூருவவாதனையாலே
யத்துவிதமொழிபொருடானன்னியமாய்த்தெளி
[வரால். 19

## நிராமயவந்தாதி.

மெய்யைப்பொய்யென்முன்வெளியைநல்லவீடென்
[முன்
சைவத்துரைகாழிச்சம்பந்தன்-ஐயமற
நின்போதம்போமிடத்தேநீயேசிவமென்மு
னென்போதத் துள்ளே யிருந்து.

22





உற்றுணரிநீயேயுயர்பிரமமென்பதுவு
மற்றசிவன்றானாய்வகுப்பதுவு-முற்று
மிறந்தவிடத்திரண்டுமேகமேயென்றான்
சிறந்தசீகாழிவருதே

## திருவள்ளுவர் குறள்

பொருளல் லவற்றைப் பொருளென் றுணரு 1
மருளானா மாணாப் பிறப்பு.
பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ் 2
செம்பொருள் காண்ப தறிவு.
எதிரதாக் காக்கு மறிவினார்க் கில்லை 3
யதிர வருவதோர் நோய்.
வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை யெரிமுன்னர் 4
வைத்தூறு போலக் கெடும்.
பொறியின்மை யார்க்கும் பழியன் றறிவறிந் 5
தாள்வினை யின்மை பழி.
துன்ப முறவரினுஞ் செய்க துணிவாற்றி 6
யின்பம் பயக்கும் வினை.

அறிவுரைத்திரட்டு முற்றிற்று.

---

ஸ்ரீசங்கரவிலாஸ சாரதாமந்திர பிரஸ், தஞ்சை.

